[24th March 1958

*United Kingdom Technical Mission*

* 388 *Q.*—Sri V. K. KRISHNAMURTHY (on behalf of Sri S. Lazar): Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether any advance party of the United Kingdom Technical Mission visited Tuticorin Port during July 1957; and

(*b*) the recommendations, if any, made by the said advance party ?

The Hon. Sri P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) No particulars are available in this regard as the Mission was sponsored by the Government of India and the Government of India have also not so far sent any communication to this Government in the matter.

Sri A. V. P. ASAITHAMBI : தூத்துக்குடி துறைமுக அபிவிருத்தி சம்மந்தமாக சர் ஏ. ராமசாமி முதலியார் செய்த சிபார்சு என்ன ஆயிற்று ? மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது இதைச் சேர்த்து வேலைக்கு எடுத்துக்கொள்ளவேண்டும் என்று மத்திய அரசாங்கத்தை நமது அரசாங்கம் வற்புறுத்துமா?

The Hon. Sri P. KAKKAN : மூலக் கேள்வியிலிருந்து இக்கேள்வி எழவில்லை.

Sri K. ANBAZHAGAN : தூத்துக்குடி துறைமுக அபிவிருத்தி தமிழ் நாட்டின் வணிக வளர்ச்சிக்கு இன்றியமையாததாக இருப்பதால், அதைக் குறித்து நிபுணர் கமிட்டி கூறிய கருத்தை நம்முறைய சர்க்கார் மத்திய சர்க்காரிடமிருந்து கேட்டு அறியுமா? அதன் பேரில் நடவடிக்கை எடுக்குமா?

The Hon. Sri P. KAKKAN : நான் பதில் சொல்லும்போது, "இன்னும் அரசாங்கத்தினிடத்தில் வரவில்லை" என்று சொன்னேன். இருந்தாலும் அது விஷயமாக மத்திய சர்க்காருக்கு எழுதி அபிப்பிராயத்தை தெரிந்து கொள்ளும்.

Sri S. NAGARAJA MONIGAR : இந்த சர்க்காரின் பல முன்னேற்றத் திட்டங்களிலும் இரண்டாவது மூன்ருவது திட்டங்களிலும் இந்தச் சபையிலிருக்கும் கனம் அங்கத்தினர்களுக்கு நம்பிக்கை இருக்கிறதா ? அந்த . . .

Mr. SPEAKER : இந்தக் கேள்வி எப்படி மூலக் கேள்வியிலிருந்து எழும் என்பது எனக்குத்தெரியவில்லை. அவருக்கே அந்தக் கேள்வியின் பேரில் நம்பிக்கை இல்லை. நாம் என்ன செய்ய முடியும்.

Sri N. K. PALANISAMI : தூத்துக்குடி அபிவிருத்தி போர்டிலும் பல லட்சக்கணக்கான ரூபாய்கள் இருக்கின்றன. 1955-ம் வருஷமே 5 லட்சத்திற்கு மேல் இருந்தது. இப்போது அதிகமாகவே இருக்கும். அந்தப் பணத்தை வைத்துக்கொண்டாவது இந்த வேலையைச் செய்யும்படி மத்திய அரசாங்கத்தை இந்தச் சர்க்கார் வற்புறுத்துமா ?

The Hon. Sri P. KAKKAN: தூத்துக்குடி துறைமுகம் பற்றிய வேலை அரசாங்கத்தின் கவனத்தில் இருக்கிறது. எதைச் செய்தாலும் அரசாங்கம் நன்கு பரிசீலனை செய்தே செய்யும்.

Sri K. B. S. MANI : சென்ற வருஷமே தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ள தரங்கம்பாடி துறைமுகம் மிகப் பழைய துறைமுகம், டேனிஷ்காரர்களுடைய காலத்தது, பண்டகசாலைகள் அமைக்க போதிய வசதியுள்ளது என்பதாக வெல்லாம் சொல்லி அந்தத் துறைமுகத்தையும் நன்கு அபிவிருத்தி செய்ய மத்திய அரசாங்கத்திற்குச் சிபார்சு செய்யப்பட்டும் அதைப்பற்றி

24th March 1958]

பரிசீலனையில் இருப்பதாகப் பதில் அளிக்கப்பட்டது. அதன் முடிவு என்ன ஆயிற்று? உடனடியாக அந்தத் துறைமுகம் அபிவிருத்தி செய்யப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

**MR. SPEAKER :** இந்தக் கேள்வி தூத்துக்குடியைப் பற்றியது. கனம் அங்கத்தினர் வெகுதூரம் தள்ளி தஞ்சாவூருக்கு வந்துவிட்டார். இதற்கு தனிக் கேள்வி போடவேண்டும். நான் இதை அனுமதிக்க முடியாது.

**SRI K. RAMACHANDRAN :** தூத்துக்குடி துறைமுகத் திட்டம் சேது சமுத்திர திட்டத்தோடு இணைக்கப்பட்டே சிபார்சு செய்யப்பட்டது என்றும், சேதுசமுத்திர திட்டத்திற்கு நடைமுறையில் சில கஷ்டங்கள் ஏற்பட்டால் தூத்துக்குடி துறைமுக வேலையையாவது தனியாக நடத்திவிட வேண்டும் என்பதாக முடிவு செய்யப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. அது உண்மையா? உண்மையால் அதன்படி நடக்குமா?

**THE HON. SRI P. KAKKAN :** கனம் அங்கத்தினர் அபிப்பிராயம் ஒரு வாறு உண்மையாக இருக்கிறது.

**SRI M. JAGANNATHAN :** ஐக்கியநாட்டு தொழில் நிபுணர்கள் குழு தூத்துக்குடிக்கு வந்தது தானாகவா? அல்லது அரசாங்கத்தின் அழைப் பின் பேரில் வந்ததா?

**THE HON. SRI P. KAKKAN :** இந்திய சர்க்கார் அழைப்பின் பேரில் தான் வந்தது.

**SRI A. V. P. ASAITHAMBI :** இந்தத் தூத்துக்குடி துறைமுக அபிவிருத்தி பற்றி ராமசாமி முதலியார் சிபார்சு இருக்கிறது. அங்குள்ள வர்த்தக ஸ்தாபனத்தின் சிபார்சு இருக்கிறது. யு.கே. நிபுணர்களும் போய்ப் பரிசீலனை செய்திருக்கிறார்கள். ஆனால் இவர்களுடைய சிபார்சுகளின் படி எந்தச் சிபார்சை சர்க்கார் ஏற்றுக் கொள்கிறார்கள்? இவ்விஷயத்தில் சர்க்காருடைய அபிப்பிராயம் என்ன என்று அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI P. KAKKAN :** தூத்துக்குடியை மத்தியதரத் துறைமுக அபிவிருத்தி செய்வதற்கு அரசாங்கம் தக்க ஏற்பாடு செய்து கொண்டிருக் கிறது.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இதிலே சேதுசமுத்திர திட்டத் தையும் இணைத்து தூத்துக்குடி துறைமுகத்தை அபிவிருத்தி செய்யவேண்டும் என்பது சர்க்காரின் நோக்கம். திட்டம் அந்த அடிப்படையில்தான் பரிசீலனை செய்யப்பட்டிருக்கிறது. இப்போது இருக்கிற நிதி நிலைமை அடிப் படையை வைத்துக்கொண்டு பார்க்கும்போது சேதுசமுத்திரத்தை எடுத்துக் கொள்வது கஷ்டமாக இருந்தால் தூத்துக்குடி துறைமுகத்தை தனியாக எடுத்துக் கொண்டுவிடலாம் என்று அபிப்பிராயப்படுகிறார்கள். இந்தச் சர்க்காரைப் பொறுத்தவரையில் இந்த இரண்டையும் இணைத்தே எடுத்துக் கொள்ளவேண்டும் என்ற முறையில் மத்திய அரசாங்கத்தினிடம் வற் புறுத்தித் தெரியப்படுத்தியிருக்கிறது.

### *Electricity for pumpsets.*

***389 *Q.*—SRI S. M. ANNAMALAI : Will the Hon. the Minister for Electricity be pleased to state whether there is any proposal to supply electricity for running pumpsets in wells owned by more than one person after taking an indemnity bond from them ?**

THE HON. SRI V. RAMIAH : No, Sir.

**SRI S. M. ANNAMALAI :** ஒரே கிணற்றில் இரண்டு பேருக்கும் பாகம் இருந்து வந்த இரண்டு பேரில் ஒருவருக்கு சர்வீஸ் கொடுத்துவிட்டு அவர் தண்ணீர் இறைக்கும்போது மற்றவருக்கும் அந்த வசதி கிடைப்பதற்கு இண்டெமினிடி பாண்டு எழுதி வாங்கிக் கொண்டு சர்வீஸ் கொடுக்கலாம் என்பதாக விதிகளிலும் இருக்கிறது. அவ்வாறு செய்ய ஏற்பாடு செய்யப் படுமா?